# பகவத் பாதை
## BAGAVATH PATHAI
தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 10 | மே 10, 2022 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 10 | May 10th, 2022 | Annual Subscription Rs. 100/-


Sri Bagavath Radio
ஞாலம் எங்கும் ஞானம் பரப்ப
ஸ்ரீ பகவத் ரேடியோ
www.sribagavathradio.com






தேடல் உள்ள நெஞ்சங்களுக்கு ஞான புரிதல் தந்து
விடுதலை அளிக்கும் ஞானத்தின் அலைவரிசையில் இணைந்திருங்கள்


ஸ்ரீ பகவத் ரேடியோ
App Download செய்ய

## ஞானம் என்றால் என்ன ?



# வாழும் ஞானி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
# குற்றாலத்தில் 3 நாள் ஞான முகாம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் 3 நாள் நேரடி ஞான முகாம், குற்றாலத்தில் நடைபெற உள்ளது.

நாள்: 13-08-2022 சனிக்கிழமை காலை 8.00மணிமுதல் 15-08-22 திங்கட்கிழமை மதியம் 3.00 மணி வரை

இடம்: **BWDA Institute of Development Finance -BID-FIN.** பழைய குற்றாலம் ரோடு, குற்றாலம் - 627802.

செலவு பகிர்வு ரூ.**5000/-** நபருக்கு
(உணவு மற்றும் தங்குமிடம் உட்பட)

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 12-08-22 அன்று வெள்ளிக்கிழமை மாலைக்குள் வந்து சேர வேண்டுகிறோம்.

குளுகுளு குற்றாலத்தில் ஞான முகாம் நடைபெறுவதால் ஆனந்தமாக அருவியில் குளித்து ஞானத் தெளிவு பெற்று மகிழ்வுடன் செல்லலாம். குடும்பத்துடன் கலந்து கொள்வது சிறப்பு.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளன.

தனி அறை வேண்டுபவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கவும்.

Triple Bed rooms (மூவர் தங்கும் அறைகள்) உள்ளன.

இதற்கு (ரூ.3000/-ஒரு நாளுக்கு) தனிக் கட்டணம் செலுத்த வேண்டுகிறோம். ஓர் அறையில் இணைந்து தங்குபவர்கள் இந்த கட்டணத்தை பகிர்ந்து (Sharing) கொள்ளலாம்.

குறைந்த எண்ணிக்கையில் இருப்பதால் முன் பதிவு அவசியம்: தொடர்புக்கு: 7904118421

கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை. ஆதார் Xerox Copy உடன் Courtallam Gnana mugaam என Type செய்து Whatsapp அனுப்ப வேண்டிய எண்: 9942219065

முன் பதிவுக்கு
**+917904118421, +919994205880, +919789165555**

அன்புடன்,
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-636003.
**9994205880, 9789165555**

உள்ளே


| | |
|---|---|
| ஞானம் என்றால் என்ன? | 3 |
| நம் கண்களை குளமாக்கிய ஓர் அற்புத நிகழ்வு | 6 |
| ஜென்கதை - நான் சருகாகிப் போனேன் | 8 |
| ஆசிரியர் பகுதி | 10 |
| நிகழ்ச்சி நிழல்கள் | 12 |


கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





**31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu India**
**www.sribagavathmission.org**
**www.sribagavath.org**
**E-mail : sribagavathmission@gmail.com**

**V.A.P. SHARAVANAN - 99942 05880**
**K.S. JEEVAMANI - 97891 65555**



**This book Designed by**
**SRI ESPARI GRAPHICS, Salem-3.**
**Cell : 90926 46260, 98651 34075**


## திருநெல்வேலியில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞான முகாம்

வாழும் ஞானி ஸ்ரீ பகவத் அய்யா அவர்களின் ஞான முகாம் திருநெல்வேலி மாநகரில் நடைபெற உள்ளது. வாருங்கள்... ஞான முகாமில் கலந்து கொண்டு இரண்டு நாட்களில் நீங்களும் ஞானி ஆகலாம்.

இடம் : **Dr. K. S. மஹால்,** காமாட்சி அம்மன் கோவில் அருகில், அருவி பேக்கரி எதிர்புறம், தூத்துக்குடி மெயின் ரோடு, கேடிசி நகர், திருநெல்வேலி -11.

நாள் : 4-6-2022 முதல் 5-6-2022 வரை.

நேரம்: 9.30 am to 7.30 pm (இரண்டு நாட்களும்)
(மண்டபத்தில் இரவில் தங்கி கொள்ளலாம்)

செலவு பகிர்வு ரூ.**1000/-** (தேநீர் மற்றும் மதிய உணவு உட்பட)

முன்பதிவு அவசியம். முன்பதிவிற்கு :

**8940078282, 9600895889, 9842519209, 9543738054**
**Google Pay: +918531036977**

செலவு பகிர்வு கட்டணம் செலுத்தியவர்கள் **09942219065 or 9789165555** என்ற எண்ணில் வாட்ஸ்அப் **or SMS** மூலமாக தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்**

**9994205880, 9789165555**



# ஞானம் என்றால் என்ன ?

- ஸ்ரீ பகவத்

புத்தருடைய சீடர்கள் ஒருநாள் அவரிடம் கேட்கின்றனர்: "ஞானம் அடைபவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருக்கிறதே, என்ன காரணம் ? அதனை நாங்கள் அறிந்து கொள்ளலாமா?".

அதற்கு புத்தர் அவர்களிடம், "நீங்கள் எல்லோரும் வெளியே சென்று ஒவ்வொருவரும், 10 பேரை சந்தித்து, யார் யாருக்கு என்னென்ன வேண்டும், எனக் கேட்டு அவர்கள் என்ன பதில் சொல்கிறார்கள் என அறிந்து வாருங்கள்" என்றார்.

சீடர்களும் வெளியே சென்று எதிர்படும் 10 நபர்களைச் சந்தித்து, "உங்களுக்கு என்னென்ன தேவை?. வாழ்க்கைக்கு என்ன வேண்டும்?" எனக் கேட்டு, திரும்பி புத்தரிடம் வந்தனர்.

திரும்பி வந்த சீடர்களிடம், "நீங்கள் ஒவ்வொருவரும் 10 நபர்களிடம், வாழ்க்கையில் அவர்களுக்கு வேண்டுவதென்ன என்று கேட்டீர்களே, அவர்கள் என்ன சொன்னார்கள்? அவர்களில் யாராவது ஞானம் வேண்டும் என்று கேட்டார்களா?" என்று புத்தர் கேட்டார்.

அதற்கு சீடர்கள், "ஒருவரும் கேட்கவில்லையே" என்றனர்.

"அப்படியானால் அவர்கள் என்ன தான் கேட்டார்கள்?" என்று புத்தர் கேட்டார்.

"எங்களுக்கு நிம்மதியே போதும், மகிழ்ச்சி கூட வேண்டாம், துன்பமே இல்லாமல் நிம்மதியாக இருந்தால் போதும்." என்றே அனைவரும் கேட்டார்கள் என சீடர்கள் கூறினர்.

அப்படிப் பார்த்தால், உண்மையிலேயே எல்லோரும் ஞானம் தான் கேட்டிருக்கிறார்கள். ஆனால் வேறொரு கோணத்தில் கேட்டிருக்கிறார்கள்.

துன்பம் இல்லாத நிலையும் ஞானமும் வெவ்வேறானவை அல்ல. இரண்டும் ஒன்று தான்.

எனினும், ஞானம் என்பதன் பொருளை நாம் சரியாக விளங்கிக் கொள்ளாததால், துன்பம் இல்லாத நிலை என்பதை, ஞானத்துடன் தொடர்புப்படுத்தி பார்ப்பதில்லை.

உங்களுக்கு தெரிந்த பெரியவர் ஒருவரிடம் சென்று," எனக்கு மனசு சரியில்லை, எப்படி சரி செய்வது?" என்று நீங்கள் கேட்கிறீர்கள் என வைத்துக் கொள்வோம்.

அதற்கு அந்த பெரியவர், "நீ ஞானம் அடைந்தால், உனக்கு நிம்மதி கிடைக்கும், மனசு சரியாகும்" என்று சொன்னால் என்னவாகும்?

அவரது பதில் உங்களுக்கு எப்படித் தோன்றும்?

ஏனெனில், நம் மனதில், ஞானம் என்பது பிரம்மாண்டமான அம்சமாக உள்ளது. அது ஒரு சாதாரண விஷயமாக நமக்குத் தெரியவதில்லை.

திருக்குறளில் கூட துன்பங்களைத் தவிர்க்க, துன்பங்களில் இருந்து விடுபட என்ன வழி கூறப்பட்டுள்ளது எனப் பார்த்தால்,

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது"

என்றே கூறப்பட்டுள்ளது.

"இறைவனை அடைந்தால் மட்டுமே மனக்கவலை இருக்காது. இல்லையெனில் மனக்கவலையை மாற்ற முடியாது." இப்படிதான் கூறப்பட்டுள்ளது.

இறைவனைச் சார்வதும், ஞானம் அடைவதும் ஒன்றே தான். "ஞானி" ஆனால் மட்டுமே மனக்கவலை இருக்காது.

-இதுதான் அதன் பொருள்.

ரமண மகரிஷியிடம் சீடர் ஒருவர், "ஞானம் அடைய என்ன செய்ய வேண்டும்? நாம ஜெபம் பண்ணினால் ஞானம் அடையலாமா?" என கேட்கிறார்.

அதற்கு ரமண மகரிஷி, "ஆம், ஞானம் அடையலாம்" என்கிறார்.

உடனே சீடர், "காலையில் 1 மணி நேரம்,

மாலையில் 1 மணி நேரம் ஜெபம் செய்தால் போதுமா?" என்று கேட்கிறார்.

"கால அட்டவனை (TIME TABLE) போட்டு எல்லாம் ஜெபம் செய்தால் ஞானம் அடைய முடியாது. நீங்க அகோராத்திரம் (இரவும்,பகலும்) செய்ய வேண்டும்" என்கிறார் ரமண மகரிஷி.

இதே போல் தான் எல்லோரும், "ஞானம்" என்ற பெயரில் மிகப்பெரிய கெடுபிடியை நடத்தி விடுகிறார்கள்.

ஞானம் என்பது என்னவென்று நமக்குத் தெரியாததால், பெரியவர்கள் என்று, யாரை நினைக்கிறோமோ அவங்க சொல்வது தான், நமக்கு வேத வாக்காக இருக்கிறது .

ஒரு இந்தியர் அமெரிக்காவில் உள்ளார். அவர் நம்மிடம்,

"ஐயா ஞானம் 40 வயதிற்குள் அடைய வேண்டுமா?" எனக் கேட்டார்.

அதற்கு

"40 வயதுக்கு மேல் அடைந்தால் என்ன பிரச்சினை?" என்று கேட்டேன்.

அதற்கு அவர், "ஞானம் பெறும் போது தலையில் பெரிய இடி இறங்குவது போல் இருக்குமாம். 40 வயதிற்கு மேல் உள்ளவர்களால் அதனைத் தாங்கி கொள்ள முடியாதாம். அதனால் கேட்டேன்" என்று கூறினார்.

இப்படி தான் ஞானம் பற்றிய புரிதல் இருக்கிறது. இன்னமும் பலரிடம் இருந்து கொண்டும் இருக்கிறது.

"அப்படியானால் ஒரு இடிதாங்கி தயார் செய்து வைத்துக் கொள்ளுங்கள். வந்தாலும் சமாளித்துக் கொள்ளலாம்" என வேடிக்கையாகக் கூறினேன்.

இப்படி தான் ஞானம் பற்றிய கருத்து இருக்கிறது.

அப்படி தான் நாங்களும் ஞானத்தைத் தேடி அலைந்தோம். 18வது வயதில் ஆரம்பித்து, 58வது வயதில் –சுமார் 40 வருடங்கள் கழித்துதான் ஞானம் ஏற்பட்டது.

ஆன்மிகத் தேடலில் உள்ள நாங்கள், தியானம், தவம், சத்சங்கம் என ஈடுபட்டோம். விடுமுறை தினங்களில் ஏதாவது மலைப்பகுதிகளுக்குச் செல்வோம்.

அப்படி ஒருமுறை அத்ரி மகரிஷி ஆசிரமம், – அதாவது அத்ரி கூடம் என்று சொல்வார்கள்– அங்கு சென்றோம். ஆசிரமத்தில் சாமியார் ஒருவர் பூஜை செய்து கொண்டு, வருபவர்களுக்கு உபசரிப்பு செய்து வந்தார்.

ஆசிரமத்திற்கு போகும் வழியில் குகை ஒன்று உள்ளது. அதில் "முஸ்லீம் துறவி ஒருவர் தியானம் பண்ண வருவார். எப்போதாவது தான் வருவார்" என்றும் அந்த சாமியார் சொன்னார்.

"நாம் இருக்கும் போது வந்தால், நாமும் அவரைப் பார்த்துக் கொள்ளலாமே" என்று எங்களுக்குள் பேசிக் கொண்டோம்.

சுமார் அரைமணி நேரத்தில் அவரே, – அந்த முஸ்லீம் துறவியே – எங்களைத் தேடி வந்துவிட்டார்.

"இங்கு யாரோ ஆன்மிகத் தேடலில் வந்திருப்பதாகச் சொன்னதால் தான் வந்தேன்" என்றார்.

பேசிக் கொண்டிருந்தோம். அப்போது எங்களிடம், "இரவில் எத்தனை மணிக்குத் தூங்கச் செல்வீர்கள்" எனக் கேட்டார்.

அதற்கு நான், "இரவு 10 மணி அளவில் படுத்து விடுவோம்" எனக் கூறினேன்.

உடனே அவர், ஆதங்கப்பட்டு, "அய்யய்யோ! அப்படி எல்லாம் சீக்கிரம் தூங்கக் கூடாது!நாம் ராத்திரி தான் விழித்திருக்க வேண்டும். ராத்திரி முழுவதும் நமக்கானது. ராத்திரி நாம் தூங்கவே கூடாது!" என்று கூறிவிட்டார்.

அதனால் அன்று இரவு பயந்துகொண்டே தூங்க வேண்டியது ஆகிவிட்டது.

"உலகியல் சம்பந்தப்பட்டவைகளை விட்டு விட்டு எங்கோயோ தனியாகப் போய் இதற்கு முயற்சி பண்ணனும்."

"உலகியல் பிரச்சினைகள் எல்லாம் இடைஞ்சல்கள் தான்."

"ஒட்டு மொத்தமாக தூக்கிப் போட்டு விட்டு, நாம காட்டுக்குள் சென்றோ அல்லது தனியாக உட்கார்ந்து கொண்டோ ஞானம் அடையலாம்"

– –என்பது மாதிரி,

பிரச்சினைகளையும், ஞானத்தையும், இரு துருவங்களாக்கி, பிரித்துப் பார்க்கிறோம்.

இந்தத் துருவத்தில் இருந்து, அந்தத் துருவத்திற்கு போய் சேர்ந்திடலாம் என்ற கண்ணோட்டமே நம்மிடம் உள்ளது.

உண்மையில் பிரச்சினைகளுக்கான தீர்வு என்பதும் ஒன்றுதான், நாம் ஞானம் அடைவது என்பதும் ஒன்று தான்.

பிரச்சினைக்குரிய தீர்வு என்று சொன்னால்…, பிரச்சினைகள்தான் அடுக்கடுக்காக, தொடர்ந்து வந்து கொண்டே இருக்கிறதே…,?

அந்தப் பிரச்சினைகளுக்கு உரிய தீர்வு எப்படிக் கிடைக்கும்…?

அப்படி பிரச்சினைகளுக்கெல்லாம் தீர்வு கிடைப்பதை, ஞானம் அடைவதோடு எப்படித் தொடர்பு படுத்துவது (link செய்வது) என்ற மயக்கம் ஏற்படத்தான் செய்யும்.

இப்போது நாம் நிறைய பிரச்சினைகளைப் பார்க்கிறோம்.

நாம் எல்லோருமே பிரச்சினைகளின் மத்தியில் தான் இருக்கிறோம்.

"பிரச்சினை என்றால் என்ன?" என்று கேட்டால்

எல்லோருமே சொல்லி விடுவீர்கள்.

உதாரணமாக,

ரோட்டில் நடந்து போகிறோம். ரூபாய் ஐம்பதாயிரம் வைத்திருந்த கைப்பையை யாரோ பிடுங்கிக் கொண்டு ஓடி விடுகிறார்கள் . இது ஒரு பிரச்சினை.

தெருவில் போகும் போது, ஒருவர் நம்மைத் திட்டுகிறார். நமக்கு வேதனை. இது ஒரு பிரச்சினை.

நாம் சொந்தமாக வாங்கிய இடத்தில், மற்றொருவர் ஆக்ரமித்து கட்டிடம் கட்டுகிறார். இது ஒரு பிரச்சினை.

நீதிமன்ற வழக்கில் நமக்கு எதிராக / விரோதமாக தீர்ப்பு வருகிறது. இது ஒரு பிரச்சினை.

பிரச்சினை இருந்தால் மனவேதனையும் உண்டாகும்.

பிரச்சினைகளுக்கு மத்தியில், மனவேதனை இல்லாமல் இருக்க முடியுமா...?

இருக்க முடியும் என்றால், அது எப்படி சாத்தியம் ?

பிரச்சனைகளைத் தீர்க்காமல், மனவேதனைக்கு மட்டும் தனிப்பட்ட நிலையில் தீர்வு காண முடியுமா?

நீங்கள் வெளிநாட்டில் வேலை பார்க்கிறீர்கள். சுமார் 10 வருடங்கள் கழித்து விடுமுறையில் சொந்த ஊருக்கு வருகிறீர்கள். ஒரு நாள் பழைய நண்பர்களைப் பார்த்து வரலாம் என புறப்பட்டு வெளியே வருகிறீர்கள்.

எதிரே மிக நெருங்கிய பழக்கமுள்ள பழைய நண்பர் ஒருவர் மிகவும் டிப்டாப்பாக ஆடை அணிந்து வருகிறார் .

ஏதோ விசேஷ வீட்டிற்குச் செல்கிறாரோ என நினைத்துக் கொண்டு "ஏம்பா.... நல்லா இருக்கிறாயா?" என்று கேட்கிறீர்கள்.

ஆனால், அவரோ , நீங்கள் எதிபாராத விதமாக, பளார் என உங்கள் கன்னத்தில் அறைந்து விட்டு, கெட்ட கெட்ட வார்த்தைகளால் திட்டி விட்டுச் செல்கிறார்.

உங்களுக்கு ஒரே ஆத்திரம்,குழப்பம். மிகுந்த மனவேதனையோடு அவரைக் கடந்து செல்கிறீர்கள்.

செல்லும் போது, உங்களுக்கு நெருக்கமான மற்றொரு நண்பர் எதிரில் வருகிறார். அவரைப் பார்த்ததும் அவருடன் பேசுவதா- வேண்டாமா? என நினைத்துக் கொண்டிக்கும் போதே , அந்த நண்பர் உங்களை கட்டித் தழுவி "எத்தனை வருடங்களாகி விட்டது" என ஆதங்கத்துடன் பேசுகிறார்.

அவரிடம் ஏற்கனவே சந்தித்த நண்பரைப் பற்றிக்கேட்கிறோம்.

"அவருக்கு கடந்த இரண்டு வருடங்களாக மனநிலை சரியில்லை" என்றும், "எதிரில் பார்ப்பவர்களை இப்படி கன்னத்தில் அறைந்து கெட்ட வார்த்தைகளால் திட்டுகிறார்" என்றும் கூறுகிறார்.

முதலில் சந்தித்த நண்பர், கன்னத்தில் அறைந்த வலி, இன்னமும் இருக்கிறது. இருந்தாலும், அந்த நண்பர் மனநலம் இல்லாதவர் என்று கேட்டவுடனே, உங்கள் மன நிலை -உணர்வு எப்படி இருக்கும் ? கோபம் எல்லாமே இறங்கி, நீங்கள் வேறொரு மனநிலைக்குச் சென்று விடுவீர்கள். இல்லையா?

இதே மாதிரி இன்னொரு சம்பவம்.

வட மாநிலம் செல்லும் ரயிலில் ஒரு இளம் வயது தகப்பானாருடன் சுமார் 4 மற்றும் 5 வயதுள்ள இரண்டு குழந்தைகள் பயணித்தனர்.

இந்தக் குழந்தைகள் மற்ற பயணிகளின் பொருட்களை இழுப்பது, மற்றவர்களுக்கு இடையூறு செய்வது என அதிகமான சேட்டை செய்கிறார்கள். அந்தத் தகப்பனாரும் சரியான முறையில் Control செய்யவில்லை.

பயணிகளுக்கெல்லாம் மிகுந்த கோபம்.

ஒரு பயணி மட்டும், "குழந்தைகளைக் கொஞ்சம் Control செய்யக் கூடாதா?" என தந்தையாரிடம் கேட்கிறார்.

அதற்கு அந்த தகப்பனார், "குழந்தைகள் புரியாத வயதில் உள்ளனர். எங்கு- எதற்குப் போகிறோம் என்பது கூட அந்தப் பிள்ளைகளுக்குத்தெரியாது. எனது மனைவி -அந்த குழந்தைகளின் தாயார் ஒரு கல்லூரியில் பேராசிரியையாக இருந்தார். கல்லூரி மாணவிகளுடன் வடநாடு சுற்றுலா சென்ற இடத்தில், ஒரு விபத்தில் இறந்து போய் விட்டார். அங்கே வைக்கப்பட்டிருக்கும் அவரது உடலை வாங்கத் தான் போய்க் கொண்டிருக்கிறோம். இதைப் பிள்ளைகளுக்கு எப்படிச் சொல்வது எனத் தெரியவில்லை. குழந்தைகளை எப்படி Control செய்வது எனவும் புரியவில்லை" எனக் கூறினார்.

அந்த தகப்பனாரின் சுய விளக்கத்தைக் கேட்ட அந்த ரயில் பயணிகளின் மனநிலை, தற்போது முற்றிலும் மாறிவிட்டது.

அந்தக் குழந்தைகளுக்கு உதவக்கூட முன் வந்தனர்.

சூழ்நிலை வேறு; மனதின் இயக்கம் வேறு.

சூழ்நிலை எப்படி இருந்தாலும், மனதின் இயக்கம் மட்டும் தனியே இயங்கி மாறுபட்டுச் செயல்படும் வாய்ப்பு உள்ளது, என்பதை மேற்கண்ட உதாரணக் கதைகள் உங்களுக்கு நிச்சயம் உணர்த்தும் என்று நினைக்கிறேன்.

**"சூழ்நிலையில் மாற்றம் ஏற்படாவிட்டாலும், மனதளவில் மட்டுமே கூட மாற்றம் ஏற்படும் சாத்தியமுண்டு".**

மனதின் இயக்க மாறுதல், உண்மையிலேயே மாற்றத்தைக் கொண்டு வருகிறது.

சூழ்நிலையில் தீர்வு கிடைப்பதற்கு முன்னமேயே மனதளவில் தீர்வு கிடைத்துவிடுகிறது. மனதளவிலான தீர்வு தான் முக்கியமானது.





V.A.P. சரவணன்
செல் : 99942 05880

# நம் கண்களை குளமாக்கிய ஓர் அற்புத நிகழ்வு

கடந்த ஏப்ரல் மாதம் 23 & 24 –ஆம் தேதிகளில் சென்னையில் நடைபெற்ற ஞான முகாமை முடித்துக்கொண்டு சேலம் ஸ்ரீபகவத் பவனுக்கு திரும்புகையில் மறைமலை நகரைச் சேர்ந்த டீக்கடைக்காரர் திரு. வெங்கட்ராமன் ஐயாவின் செயல்பாடு நமது கண்களை குளமாக்கியது.

அந்த நிகழ்வின் பதிவே இது...

மனநிலை பாதிக்கப்பட்ட ஒருவரிடம் ஸ்ரீ பகவத் அய்யாவின் ஞானப் புரிதல் எந்தவிதமான மாற்றங்களை ஏற்படுத்தும் என்பதற்கான நடைமுறை உதாரணமே திரு வெங்கட்ராமன் ஐயா. இவர் மறைமலை நகரில் பாண்டியராஜன் என்ற பெயரில் உள்ள டீக்கடை உரிமையாளர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானப் புரிதலால் இருபது வருடமாக பாதித்திருந்த மன நோயிலிருந்து விடுபட்டு தற்போது சிறப்பாக செயல்பட்டு வருகிறார்.

அவரது ஒவ்வொரு செயலும் உண்மையான அர்ப்பணிப்பு என்பதை நமக்கு புரிய வைத்த அந்தத் தருணம்...

அது ஒரு அற்புதமான நிகழ்வு...

இனி மறைமலைநகர் டீ கடைக்காரருடன் நடந்த நிகழ்வை பார்ப்போம்...

பகவத் பாதையில் பயமும் விடுதலையும் என்ற கட்டுரைக்கு காரணமானவர்.

மேலும் தன்னைப் பற்றி யார் என்ன நினைத்துக் கொண்டாலும் சரி தன்னைப்போல பாதிக்கப்பட்ட மற்றவர்களுக்கு ஓர் உதவியாகவும் முன் உதாரணமாக அமைய வேண்டும் என்பதற்காக தான் அடைந்த பாதிப்பை பற்றியும் அதிலிருந்து விடுபட்டது எப்படி என்பதையும் தயக்கமின்றி கூறுவதில் உறுதியாக இருக்கக் கூடிய நல்ல மனிதர்.

டீக்கடை வைத்து வாழ்க்கை நடத்திவரும் அவரிடம், "நீங்கள் ரூபாய் இருபத்தி ஐயாயிரம் நன்கொடை கொடுத்து ஸ்ரீபகவத் பவனில் நிறுவனராக சேர்ந்து கொள்வதற்காக அதிகம் சிரமப்பட வேண்டாம்" என்று நாம் எடுத்து கூறிய பிறகும் கூட, இதுவரை மருத்துவம் மற்றும் மாத்திரைகளுக்காக எவ்வளவோ செலவு செய்திருக்கிறேன். இப்போது அந்த செலவுகள் இல்லை. இன்னும் பலருக்கு இந்த புரிதல் கொண்டு போய் சேர்க்க வேண்டும் என்பதற்காக ஒரு வருடத்திற்கு ஆன செலவில் பாதியைத்தான் கொடுக்கிறேன்" என்று கூறி பகவத் பவன் நிறுவன உறுப்பினராகத் தன்னை இணைத்துக் கொண்டவர்.

நமது ஸ்ரீபகவத் ஐயாவை பார்க்க வரும்போதெல்லாம் அவரால் முடிந்த தொகையை நன்கொடையாக இதுவரை வழங்காமல் போனதே கிடையாது. ஒவ்வொரு முறையும் மகிழ்வுடன் வழங்கி வருகிறார்.

கடந்த மாதம் நடைபெற்ற ஞான முகாமிற்கு வந்திருந்த இவர், வழக்கம் போல ஒரு தொகையை ஸ்ரீ பகவத் அய்யாவிற்கு நன்கொடையாக வழங்கிவிட்டு, டீ கடைக்கு வருபவர்களில் மனப் பிரச்சினையால் பாதிக்கப்பட்டவர்களுக்கு கொடுப்பதற்கென 30 நூல்களையும் வாங்கிச் சென்றார்.

சென்னைக்கு வழக்கமாக ரயில் பயணத்தை மேற்கொள்ளும் நான், இந்த முறை சென்னை முகாமுக்கு நிறைய பொருட்களை எடுத்து வர வேண்டியிருந்ததால் காரில் பயணத்தை மேற்கொண்டேன்.

சென்னையில் இருந்து சேலம் திரும்புவதற்காக ஸ்ரீ பகவத் ஐயாவுடன் நானும் என் மனைவி மற்றும் டிரைவர் ஹரியும் என நால்வரும் காரில் பயணத்தை மேற்கொண்டோம். ஐயாவுக்கு மிகவும் பிடித்த ஜெமினி கணேசனின் பாடல்களை பிபி ஸ்ரீனிவாசன் அவர்களின் குரலில் தளர்வாக கேட்டுக்கொண்டு பயணித்தோம்.

அன்று காலையில், "எப்பொழுது சேலம் செல்கிறீர்கள்?" என்று போனில் விசாரித்தார் டீக்கடைக்காரர்.

11 மணி அளவில் புறப்படுவதாக கூறினேன்.

"நீங்கள் காரில் பயணிக்கும் பொழுது போகும் வழியில் அப்படியே என்னுடைய கடைக்கு வந்தால், நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைவேன். எனது நீண்ட நெடுநாள் ஆசையும் நிறைவேறும்" என்றார் அவர்.

மேலும், ”என்னுடைய மிகப்பெரிய ஆசை என்னவெனில், நான் எனது கைகளால் டீ போட்டு ஸ்ரீ பகவத் ஐயாவுக்கு கொடுக்க வேண்டும் என்பதே...

”ஐயா அவர்களின் பாதம் என் கடையில் பட வேண்டும். அவர் பாதம் பட்டால் நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைவேன். எனக்கு ஒரு வாய்ப்பை உருவாக்கித் தர உங்களால் முடியுமா?” என்று என்னிடம் கெஞ்சி கேட்டுக் கொண்டார்.

சென்னை மறைமலை நகர் பைபாஸ் ரோட்டில் இருந்து அவருடைய டீக்கடையும் மிக அருகாமையில் தான் அமைந்திருக்கிறது.

சரி, என்று நானும் ”அய்யாவிடம் கேட்டு பார்த்து விட்டு உங்களுக்கு கூறுகிறேன்” என்று கூறினேன்.

அய்யாவிடம் டீக்கடைக்காரர் கூறியது பற்றி நான் கேட்டதற்கு ”சரி, நாம் இன்று சேலத்திற்கு போகும் வழியில் அவர் கடையில் நிச்சயம் ஒரு டீ அருந்தி விட்டு செல்வோமே” என்று பதில் கூறினார்.

அடுத்த ஒரு மணி நேர பயணத்தில், மறைமலைநகர் பாண்டிராஜன் டீ ஸ்டாலை அடைந்தோம்.

பாய்லர் டீக்கடை அமைப்பு, கடையில் பஜ்ஜி, போண்டா, முறுக்கு, பிஸ்கட், வாழைப்பழம், மிட்டாய்கள் என அனைத்துடன் தண்ணீர் பாட்டில், கூல்ட்ரிங்ஸ் கொண்ட ஒரு பெரிய ஃபிரிட்ஜ்வுடன் இருந்தது.

கடையின் முன்பாக வாடிக்கையாளர்கள் பஜ்ஜி போண்டா, வடை, டீ என சாப்பிட்டுக் கொண்டும் ஒருசிலர் சிகரெட்டை ஆனந்தமாகப் புகைத்துக் கொண்டும் அவர்களுக்குள்ளாக அரசியல் மற்றும் பல விஷயங்களை சுவாரசியமாக பேசிக்கொண்டும் இருந்தனர்.

கடையில் மிகவும் சுறுசுறுப்பாக டீ ஆற்றிக் கொண்டு வேலை பார்த்துக்கொண்டிருந்தார் வெங்கட்ராமன் ஐயா.

மேல் சட்டை கூட போட்டிருக்கவில்லை. கருப்பு பனியன், லுங்கியுடன் எளிமையாகவும் இயல்பாகவும் செயல்பட்டுக் கொண்டிருந்தார். வேறு எந்த சிறப்பு தோற்றமும் அவரிடம் இல்லை.

எங்களைப் பார்த்தும் டீ ஆற்றிக் கொண்டிருந்தவர் உள்ளப் பூரிப்புடன் எங்களை வரவேற்று கடைக்கு உள்ளே அழைத்துச் சென்று ஐயாவை ஒரு நாற்காலியில் அமர வைத்தார்.

தன்னை மீளாத் துயரத்தில் இருந்து மீட்டெடுத்த ஓர் ஞானிக்கு அன்புடன் டீ ஆற்றி அவரது கையில் கொடுத்தார். அதே அன்புடன் எங்கள் மூவருக்கும்.

அய்யாவின் ’கவலைகள் அனைத்திற்கும் தீர்வு’ எனும் நூல்கள் சில மனக் கவலைகளால் பாதிக்கப்பட்டவர்களுக்காக அவர் வேலை பார்க்கும் டீ பாயிலருக்கு மேலே உள்ள கயிற்றில் தொங்கிக் கொண்டு இருந்தன.

அவரின் டீக்கடையின் முகப்பில் ஞான முகாம் போஸ்டர்கள் இரண்டு ஒட்டி இருந்தன.

சென்னை ஞான முகாம் பற்றிய அறிவிப்பை மனக் கவலையால் பாதிக்கப்பட்டவர்களுக்கு தெரிவிக்க வேண்டும் என்பதற்காக 500 நோட்டீஸ்களையும் 75 போஸ்டர்களையும் தானே முன்வந்து வாங்கி அந்த பகுதி முழுவதும் ஒட்டியிருந்தார்.

மேலும் மனப் பிரச்சினையால் பாதிக்கப்பட்ட மூன்று நபர்களுக்கு ஞான முகாமிற்கு தானே கட்டணம் செலுத்தி அனுப்பி வைத்திருந்ததும் நமக்கு தெரிந்தது.

டீக்கடைக்கு வரும் நபர்கள் யாரேனும் மிகவும் சோர்வாக தென்பட்டால் அவர்களை தனிமையில் அழைத்து பேசி பகவத் அய்யாவின் நூல்களை கொடுத்து ”இந்த புத்தகத்தை நன்றாக படியுங்கள். எல்லாம் சரியாகிவிடும்” என்று கூறிவிட்டு காசு எதையும் வாங்கிக் கொள்வது இல்லையாம். இவர், ”நீங்கள் இதனால் பயன் பெற்றால் நீங்களும் மற்றவர்களுக்கு இதுபோல வாங்கிக் கொடுங்கள்” என்று கூறி விடுவாராம்.

கடையில் வாழைப்பழம் தொங்க விடப்பட்டிருந்தது.

”எடுத்துச் சாப்பிடுங்கள்” என்று கூறிவிட்டு, எனது மனைவியைப் பார்த்து ”தங்கச்சி பாப்பா, இங்க வாமா” என்று கூறி பிரிட்ஜில் இருந்து இரண்டு லிட்டர் தண்ணீர் பாட்டில், கூல் ட்ரிங்ஸ், சாக்லேட், பிஸ்கட் என எடுத்துக் கொடுத்து ”எது வேண்டுமானாலும் சும்மா அள்ளி போடு தங்கச்சி பாப்பா’ என்று அன்புடன் கூறி இரண்டு பைகள் முழுவதும் தின்பண்டங்களை அள்ளி நிறைத்து திணித்து கொடுத்தார்.

அவரின் எல்லையற்ற அன்பு நம் கண்களைக் கலங்கச் செய்தன.

நாங்கள் நால்வரும் மெதுவடையும் வாழைப்பழங்களும் சாப்பிட்டோம்.

”உங்களைப் போன்ற ஒரு மிகப் பெரிய ஞானியின் பாதம் என் கடையில் பட நான் மிகவும் புண்ணியம் செய்திருக்க வேண்டும்” என்று கூறி பகவத் அய்யாவின் பாதங்களில் விழுந்து வணங்கி நமஸ்கரித்து கொண்டார்.

”உங்களையெல்லாம் என் இல்லத்தில் அழைத்துச் சென்று நிறைவாக உணவருந்தி அனுப்பி வைக்க வேண்டும் என்பது எனது விருப்பம். ஆனால் உங்களின் சூழ்நிலையும் நேரமும் அப்படி இல்லை” என்று கூறி எனது மனைவியிடம் ”தங்கச்சி பாப்பா” என்று கூறி 1000 ரூபாயை மடக்கி கைகளில் திணித்துவிட்டு ”வெயில் மிகவும் கடுமையாக இருக்கிறது. வழியில் ஓர் ஏசி உணவகத்தில் அமர்ந்து நிறைவாக சாப்பிட்டு சென்றால் எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும்” என்று கூறினார்.

தன்னுடைய கடமையிலும் பொறுப்பிலும் தான்

ஆற்றும் டீ யிலும் என ஒவ்வொரு விஷயத்திலும் கவனமாகவும் பொறுப்பாகவும் நடந்து கொண்டார்.

நாங்கள் இருந்த சுமார் 20 நிமிடங்களில் கிட்டத்தட்ட 15 டீ போட்டு கொடுத்திருப்பார் வாடிக்கையாளர்களுக்கு.

வாடிக்கையாளர்களை கவனித்துக் கொண்டும் எங்களோடு பேசி கொண்டும் பம்பரமாக செயல்பட்டார்.

அவரின் அன்பான செயல்களும் நடவடிக்கைகளும் நம்மை திக்குமுக்காட செய்தன.

அவரின் மனநிலையில் எத்தனை மாற்றங்களை இந்த புரிதல் ஏற்படுத்தி இருக்கிறது! என்பதைப் பார்த்து வியந்து போனேன்.

அவரின் அன்பும் அரவணைப்பும் நம்மை அறியாமல் நம் கண்களை குளமாக்கின.

நான் மிகவும் உணர்ச்சிவசப்பட்டே போனேன். எது உண்மையான அன்பு என்பது புரிந்தது.

டீக்கடைக்காரர் பல ஆண்டுகளாக பழகி வந்தாலும் புரிதல் அவருக்குள் எவ்வளவோ மாற்றங்களை நிகழ்த்திருக்கிறது என்பது இப்போது தான் அவரின் செயல்பாடுகள் மூலம் தெரிந்தது.

தன்னை பாதித்த நிகழ்வு, தான் எடுத்துக்கொண்ட மருந்து, மருத்துவம் போன்ற அனைத்தையும் அப்பட்டமாக அப்படியே எடுத்துக் கூறவும் ஒரு தைரியம் வேண்டும்.

தன்னால் முடிந்த உதவிகளை மற்றவர்களுக்கு செய்வதையே நோக்கமாக கொண்டு செயல்படுகிறார்.

நல்ல காரியத்தை எப்படி செய்வது? என்ன செய்வது? எங்கே செய்வது? என்று கேட்கும் பலரின் கேள்விக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டார்.

20 ஆண்டு காலமாக தொடர்ந்து மாத்திரை எடுத்துக் கொண்ட ஒருவருக்கு, புரிதல் எவ்வாறு வேலை செய்கிறது என்றும் மேலும் புறச் செயல்களில் எவ்வாறு மாற்றத்தை ஏற்படுத்தி இருக்கிறது என்பதற்கும் நடைமுறை உதாரணமாக இருந்து வருகிறார் மறைமலைநகர் டீக்கடை உரிமையாளர் திரு வெங்கட்ராமன் ஐயா.

ஸ்ரீபகவத் ஐயா, இறுதியாக ஒன்றே ஒன்றைக் மட்டும் தான் கூறினார்.

"நம் மனம் எதை வேண்டுமானாலும் கூறி விட்டுப் போகட்டும், அதையெல்லாம் நாம் கண்டுகொள்ளாமல் அந்த சூழ்நிலைக்கு நம்மால் என்ன செய்ய முடியுமோ அதை தொடர்ந்து செய்துகொண்டே இருந்தால் போதும். அதுவே வாழ்வில் நல்ல மாற்றத்தை கொண்டு வரும்".

- இது பொன்னேட்டில் பொரிக்க வேண்டிய வரிகள்.

நாங்கள் அனைவரும் நெகிழ்வுடன் அவரிடமிருந்து ஐயாவுடன் விடைபெற்றோம்.

இது அவருக்கு மட்டுமல்ல. பகவத் பாதையில் பயணிக்கும் அனைவருக்கும் நமது பகவத் ஐயா வழங்கியிருக்கும் உண்மை.

பகவத் ஐயாவுடன் நாம் சேர்ந்து வாழும் இந்த வாழ்க்கையை முழு திருப்தியுடனும் மகிழ்வுடனும் நிறைவாக வாழ்வோம்.

மிக உயர்ந்த சமுதாயப் பணியை ஸ்ரீபகவத் மிஷன் செய்து கொண்டிருக்கிறது.

நமது குடும்ப உறுப்பினர்கள் வழங்கும் நன்கொடை நமது மிஷனுடன் இணைந்திருப்பது உலக நல் மாற்றத்திற்கான விதையாக அமையும். ★

# ஜென் கதை

## "நான் சருகாகிப் போனேன்"

ஞானத்தேடல் கொண்ட சாதகன் ஒருவன், வாழும் ஜென் ஞானி ஒருவரிடம்,"நீங்கள் எப்படி ஞானியானீர்கள் சுவாமி?" என்று கேட்டான்.

ஞானி அமைதியாக பதில் சொன்னார்.

"ஒரு நாள் மரத்தடியில் தாங்க முடியாத வேதனையோடு உட்கார்ந்து இருந்தேன். நான் வேதனையில் இருந்து விடுபட செய்ய வேண்டிய எல்லா காரியமும் செய்தாயிற்று...

"எனக்கு சாத்தியமானது எல்லாமும் செய்து பார்த்தாயிற்று. மனதில் ஒன்றும் நடக்கவில்லை...

"ஒரே விரக்தியாக இருந்தது. வேதனையில் இருந்து விடுபட இறைவனிடம் எவ்வளவோ வேண்டினேன். ஆனால் விடுதலை கிடைத்தபாடில்லை. எல்லாவற்றையும் இணைக்கும் ஏதோ ஓர் இணைப்பு மட்டும் புரியாமல் இருந்தது. வேதனையில் இருந்து விடுபடுவதற்கு வழி தெரியவில்லை...

"ஏதோ ஒன்றுக்கு மட்டும் இன்னும் விடை தெரியாமல் போய் கொண்டிருந்தது. அப்படி விடை தெரியாத தொலைந்து போய்விட்ட அந்த இணைப்பைத்தான் கண்டுபிடிக்க மிக சிரமமானதாகிவிட்டது. அந்த இணைப்பு தன்னை

வெளிக் காட்டிக் கொடுக்காமல், நெடுங்காலம் என்னை ஏமாற்றிக் கொண்டே திரிந்தது...

“அப்படி எந்த வழியும் தெரியாமல் நான் அந்த மரத்தடியில் உட்கார்ந்து இருந்தபோது, ஒரு காய்ந்த சருகு உதிர்ந்தது. காற்றில் அசைந்து அசைந்து மண்ணில் வந்து விழுந்தது...

“அப்போது காற்று வடக்கு நோக்கி அடித்தது, சருகும் வடக்கு நோக்கி போனது. காற்று பிறகு தன் திசையை மாற்றி கொண்டது. தெற்கு நோக்கி அடித்தது, சருகும் தெற்கு நோக்கி நகர ஆரம்பித்துவிட்டது. பிறகு காற்று நின்று போய்விட்டது சருகு மண்ணில் விழுந்தது...

உதிர்ந்துவிழுந்த சருகிடம் எந்த முணுமுணுப்பும் இல்லை, ஒரு சின்ன போராட்டம் கூட இருக்கவில்லை. தனக்கென எந்த முயற்சியும் இல்லாமல் அப்படியே மண்ணில் விழுந்தது.

“தனக்கென எந்த ஒரு திசையையும் தேர்ந்தெடுத்து கொள்ளாமல், அது அதன்போக்கில் (காற்றின் திசையில்) மண்ணில் வந்து விழுந்தது...

“காற்று தெற்கு நோக்கி அடித்தால் அந்த சருகும் தெற்கு நோக்கி நகர்ந்தது. காற்று வடக்கு நோக்கி அடித்தால் அதுவும் வடக்கு நோக்கி நகர்ந்தது. காற்று நின்று விட்டால் அது கீழே இருக்கும் மண்ணில் வந்து விழுந்தது...

“தனக்கென ஒரு தனித்த செயலில்லாமல் மிக அமைதியாக ஓய்ந்து கிடந்தது...

“பிறகு மீண்டும் காற்று அடித்தது. உடனே இலை எழுந்து வானம் பார்த்து, உயர்ந்தது...

“காய்ந்த சருகியிடம் தனக்கென எந்த செயலும் இல்லை...

“உடனே எனக்கு உண்மை புரிந்தது. அப்போதிருந்து நான் சருகாகிப் போனேன்...

“தொலைந்து போன அந்த இணைப்பு, கைக்கு கிடைக்காமல் பல காலமாக இருந்தேன். இதுவரை கிடைக்காத அந்தப்புரிதலை புரிந்து அகச் சரணடைந்தேன்.

அது இதுதான்...

“முயற்சியின் மூலம் அனைத்தையும் பெறலாம். ஆனால் விடுதலையைப் பெற முடியாது...

“கடைசியாக முயற்சிப்பதையே கைவிட வேண்டியிருந்தது அந்தச்சருகைப் போல...

“அப்போதுஎல்லாம் விடுபட்டு போய்விடுகின்றன. நீயும் இசைந்து போனவனாக மாறிப் போய் விடுகிறாய்...

“உனக்கு நீ எந்தஒரு நிபந்தமும் கொடுப்பதில்லை, எந்தஒரு ஆணையும் பிறப்பிப்பவனாக நீ இருப்பதில்லை...

“காற்றை பார்த்து இப்போது ‘தெற்கே போ, நான் தெற்கே போக வேண்டி இருக்கிறது’ என்று எதுவும் சொல்வதில்லை...

“அப்போது உனக்கென்று எந்த ஓர் இலக்கும் இருப்பதில்லை...

“முழுமையின் இலக்கே உன்னுடைய இலக்கு என்றாகிப் போகிறது...

“நீ முழுமையிலிருந்து பிரிந்திருப்பவனாக இருப்பதில்லை. தனியொருவனாக உன்னை நினைத்து பிரித்து பார்ப்பதில்லை...

“முழுமையின் ஓர் அங்கமாகவே மாறி போய் விடுகிறாய்...

“முழுமை எங்கெல்லாம் போகிறதோ அங்கெல்லாம் நீயும் போகிறாய்...

“முழுமை தன்னை மாற்றிக்கொண்டால் நீயும் மாற்றிக்கொள்கிறாய்...

“முழுமை பிரவாகத்தில் பிரவகிக்கிறாய்...

“முழுமை ஓடினால் நீயும் அதனோடு ஓடுகிறாய்

“இது தான் அதன்படி நடத்தல் என்பது...

“உன்னுடைய மனம் என்று எந்த சிறு துணுக்கும் இல்லாமல் போக,

“நீ (தனக்கென ஓர் செயலற்று தான் அதுவாகி நிர்த்தல்) என்ற மனம் கழிந்தவனாக ஆகிவிடுகிறாய்...

முழுமை உன் மூலமாக ஜீவிக்கிறது

உன்னுள்வாழ்கிறது.

“உன் வடிவில் நகர்கிறது...

“உன்னை நகர்த்துகிறது...

“நீ மூச்சு விடுவதில்லை..

“முழுமையின் மூச்சாகிப் மாறி போகிறாய்.

“அப்போது எல்லாமும் வரமாகிப் போகிறது...

இறைவன் உன் மூலமாக வெளிப்படுகிறான்”



ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் தற்போது திருநெல்வேலியில் ஒரு வருடம் தங்கி தங்கியிருக்கிறார்.

அவ்வப்போது சேலம், சென்னை மற்றும் வெவ்வேறு ஊர்களில் ஞான முகாம் நடத்துவதற்கு செல்வார்கள்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் தங்கியிருந்து ஐயாவுக்கு உதவியாளராக இருந்து செயல்பட தகுதியான நபர் தேவை. விருப்பமுள்ளவர்கள் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம். தகுந்த சம்பளம் வழங்கப்படும்.

தொடர்புக்கு

**ஸ்ரீ பகவத் மிஷன்**

**9994205880, 9789165555.**



# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

அனைவருக்கும் உழைப்பாளர் தின வாழ்த்துக்கள்.

உழைப்பு என்பது அனைவருக்கும் அவசியமானதே.

ஆனால் அது அளவானதாக இருக்க வேண்டும். ஒரு நாளை எடுத்துக்கொண்டால் அதில் ஓய்வின்றி உழைப்பவர்கள் ஒருபக்கம் முழு ஓய்வாக இருப்பவர்கள் ஒரு பக்கம்.

அதிகப்படியான உழைப்பும் அதிகப்படியான ஓய்வும் ஆரோக்கியக்கேடே. உழைப்பும் ஓய்வும் அளவோடு இருப்பதே ஆரோக்கியம்.

இரண்டும் வயதுக்கேற்றாா் போல இருக்க வேண்டும். இது நமது உடல் ஆரோக்கியத்திற்கும் நமது தேவையைப் பூர்த்தி செய்வதற்கும் அத்தியாவசியமானது.

ஒரு நாட்டின் வளர்ச்சி என்பது நாட்டின் இயற்கை வளங்களும் நன்றாக இருக்க வேண்டும். நாட்டு மக்கள் அனைவருக்கும் அவர்களின் அளவான உழைப்பிலேயே அனைத்து வசதிகளும் கிடைத்து நிறைவாக வாழ வேண்டும். ஆனால் நடைமுறையில் எந்த உழைப்பும் இல்லாமல் அதிக செல்வங்களுடன் வசதிகளுடன் வாழ்பவர் சிலரும் கடின உழைப்பில் வறுமையில் வாழ்ந்து வருபவர்கள் பலரும் இருக்கிறார்கள். உண்மையில் திட்டமிட்ட செயல்பாடு இருந்தால் குறைந்த உழைப்பிலேயே அனைவருக்கும் அனைத்து வசதிகளும் கிடைக்கச் செய்யலாம். அனைவரின் வளர்ச்சிக்குத் தேவையான உழைப்பை வயதிற்கேற்ப அனைவரும் பகிர்ந்து செய்வதே சரியானது. அப்படி செயல்படும்போது உழைப்பு சுமையாகத் தெரியாது. சுகமானதாக மாறிவிடும்.

60 தேங்காயை 70 பேர் சுமந்து அனைவருக்கும் கழுத்து முறிந்த கதையைக் கேள்விப்பட்டிருப்போம்.

60 தேங்காயை ஒரே மூட்டையாகக் கட்டி 70 முட்டாள்கள் ஒவ்வொருவராக மாற்றி மாற்றி சுமந்து சென்றால் என்ன ஆகும்? கழுத்து எழும்பு முறிந்துதான் போகும். ஆனால் இதையே ஒவ்வொருவரும் ஒரு தேங்காயை எடுத்து சென்றால் பத்து பேருக்கு அந்த ஒரு தேங்காயைக்கூட சுமக்க வேண்டிய வேலை இருக்காது.

உலகில் நாம் எதிர்கொள்ளும் பிரச்சினைகளும் அப்படித்தான் உள்ளன.

இப்படி நமது நாட்டின் பணிகளை பகிர்ந்து உழைப்பதற்கான வழிமுறைகளை சாத்திய சிந்தனைகளாக புதிய உலகம் படைப்போம் எனும் நூலின் மூலம் வழங்குகிறார் ஸ்ரீ பகவத் ஐயா. இந்நூல் சமுதாய நலனில் அக்கறையுள்ள அனைவரையும் சென்றடைய வேண்டும்.

நமது ஒட்டுமொத்த மனப் பிரச்சினைகளுக்கும் மூல காரணம் நாம் செயல்பட வேண்டிய இடத்தில் செயல் படாமல் இருப்பதும், செயல் தேவையற்ற இடத்தில் செயல்பட்டுக் கொண்டிருப்பதுமே ஆகும்.

'நமக்கு எங்கு வேலை இருக்கிறது – எங்கு வேலை இல்லை' எனத் தெரிந்துகொள்வது மிக முக்கியமானது.

சரியான இடத்தில் செயல்படும்போது நமது வாழ்வு அர்த்தமுள்ளதாகவும் நிம்மதியான வாழ்வாகவும் அமையும்.

ஆன்மிகக் கல்வியில் நாம் தெரிந்து கொள்ளவேண்டிய உச்சமான பாடம் ஞானம். ஞானத்தால் விளைவதே விடுதலை. விடுதலை என்பது செயலாலோ முயற்சியாலோ விளைவதல்ல. புரிந்துகொண்டு அகச் சரணாகதி அடைவதால் விளைவதாகும்.

அறிவின் எல்லையையும் மனதின் இயற்கையையும் அறிவு புரிந்து கொள்வதே ஞானம்.

ஞானம் பெற்றவர்களால் புறத்தில் இன்னும் சிறப்பாக செயல்பட முடியும்.

மனிதகுலம் எல்லா வகையான மனத் துன்பங்களிலிருந்து விடுபட்டு இயற்கையைப் புரிந்து புறத்தில் சிறப்பாக செயல்பட்டு நிம்மதியாக

வாழவேண்டும் என்றால் ஞானம் மிகவும் அவசியம்.

இந்த மெஞ்ஞானத்தை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது நமது ஸ்ரீபகவத் மிஷனின் நோக்கம்.

அந்த வகையில் சென்னையில் சென்ற ஏப்ரல் மாதம் 23 மற்றும் 24 ஆம் தேதிகளில் இரண்டு நாள் ஞான முகாம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞானக் கருத்துகளை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வதற்கு ஏற்ற வகையில் ஸ்ரீபகவத் வானொலி என்ற இணையத்தள சேனலை ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் மூத்த கர்நாடக இசைக் கலைஞர் திரு. **G.S. மணி ஐயா** அவர்களும் புகழ்பெற்ற இருதய நோய் மருத்துவர் Cardiologist திரு. **V. சொக்கலிங்கம்** அவர்களும் இணைந்து தொடங்கி வைத்தனர்.



புகழ் பெற்ற இருதய மருத்துவர் Cardiologist Dr. V. சொக்கலிங்கம் ஞான முகாமில் கலந்து கொண்டு உரையாற்றிய போது.



மூத்த கர்நாடக இசைக் கலைஞர் திரு. G.S. மணி ஐயா அவர்கள் சென்னை ஞான முகாமில் உரையாற்றிய போது.

இந்த ரேடியோ சேனலை வடிவமைத்தவர் நேசம் மீடியா நிறுவனர் திரு. **பிரபாகரன்,** காரைக்குடி அவர்கள். பிரபாகரன் அவர்களுக்கு ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது ஸ்ரீபகவத் இணையதள வானொலியின் செயலியை **(Sri Bagavath Radio app) Play Store**-ல் பதிவிறக்கம் **(Download)** செய்து கேட்டு பயன் பெறலாம்.

இத்தகவலை அனைவருக்கும் தெரிவிக்க வேண்டுகிறோம்.



மேட்டூர் அனல் மின் நிலையத்தில் பொறியாளர்களுக்கு பணி சிறக்க Stress Management வகுப்பின் போது....

மேலும் மேட்டூர் அனல் மின் நிலையத்தில் பொறியாளர்கள் அனைவருக்கும் 27ஆம் தேதி பணிச்சுமையை எளிதாக எதிர்கொண்டு சிறப்பாக செயல்படுவது எப்படி? என்று **Mind Management** பற்றி ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் சிறப்புரை வழங்கினார்கள்.

இதனை ஏற்பாடு செய்த நமது Founder உறுப்பினர் திரு. **சங்கர்** அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இதனைத்தொடர்ந்து திருச்செங்கோட்டில் மே 1ஆம் தேதி பொது மக்களுக்கான ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான சத்தங்க உரை நடைபெற்றது. இதில் 200அன்பர்கள் கலந்து கொண்டனர். இதனை நமது Founder உறுப்பினர் திரு. **பாஸ்கர்** ஏற்பாடு செய்திருந்தார். அவருக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



திருச்செங்கோட்டில் நடைபெற்ற ஞான சத்சங்கத்தில்...

ஸ்ரீ பகவத் ஐயாவின் 2 நாள் ஞான முகாம் ஜுன் மாதம் திருநெல்வேலியிலும் 3 நாள் ஞான முகாம் ஆகஸ்ட் மாதத்தில் குற்றாலத்திலும் நடைபெற இருக்கின்றன.

இதன் விபரங்கள் இம்மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளன. அனைவரும் கலந்து கொண்டு பயன் பெற அழைக்கிறோம்.



# நிகழ்ச்சி நிழல்கள்

Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555




ஸ்ரீ பகவத் வானொலியைத் தொடங்கி வைத்தபோது.



சென்னை ஞான முகாமில்
Dr. சொக்கலிங்கம் அவர்களுடன்
திரு. ஜீவமணி மற்றும் திரு. சரவணன்.



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
ஞான உரை வழங்கும் ஆசிரியர்கள்.



ஞான முகாம் நிறைவுக்கு பிறகு
தன்னார்வலர்களுடன் ஓர் கலந்தாய்வு





